# பதிப்புரை

உயிரினங்களின் வரலாறுகளையும் பண்பு களையும் இளஞ்சிறுர்கள் அறியவேண்டுவது இன்றியமையாதது. அவற்றை அவர்களுக்குக் கற்பித்தல் நம்மவர் கடமையுமாகும்.

எளிய இனிய சொற்றொடர்களால் கருத்துக் களைத் தெளிவாக அமைத்து 'உயிர்கள் உலகம்' என்னும் தலைப்பில் முன்னரே முதற் புத்தகமும்; இரண்டாம் புத்தகமும் வெளியிட்டுள்ளோம். அதே வரிசையில் இந்நூலை மூன்ரும் புத்தகமாக வெளியிடுகின்ரும்.

பெற்ருேரும்; ஆசிரியப் பெருமக்களும் இந் நூல் வரிசையினைத் தத்தம் சிறுவர் சிறுமியர் களுக்கு விரும்பி வாங்கிக் கொடுத்துப் பய னடையச் செய்வார்களென நம்புகின்ரும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.




# உள்ளுறை








# உயிர்கள் உலகம்











உ. உ. III—2





## க. சிங்கம்

குட்டி போட்டுப் பால் கொடுப்பவைகளை விலங்கு என்பர். சிங்கம் **'விலங்கரசன்'** என்று பெயர் பெற்றது. இது விலங்குகளில் வலு மிக்கது ; பூனை இனத்தைச் சேர்ந்தது.

உயிர்க்காட்சிச் சாலையில் சிங்கத்தை நீ பார்த்திருக்கலாம். ஆண் சிங்கத்திற்குப் பிடரி மயிர் உண்டு ; வால் நுனியிலும் மயிர் அடர்ந்திருக்கும். சிங்கம் கருமை கலந்த பழுப்பு நிறமுடையது. பெண் சிங்கத்திற்குப் பிடரிமயிர் கிடையாது. இது பார்வைக்குப் புலிபோல் இருக்கும். ஆனால், வரிக் கோடுகள் இதற்குக் கிடையா.

சிங்கத்தின் பற்கள் கூர்மையான கோரைப் பற்கள் ஆகும். கால் நகங்களும் பெரிதுங் கூர்மையானவை; நீட்டவும் சுருக்கவும் கூடியவை. சிங்கத்தின் முகம் உருண்டையானது. இரவில் இதன் கண்களில் ஒளிவீசிக் கொண்டிருக்கும்.

சிங்கம் பெரிய விலங்குகளையும் வாயினால் தூக்கிச் செல்லும். யானையையும் அஞ்சாது எதிர்த்துக் கொல்லும்.

அடர்ந்த காடுகளில் சிங்கங்கள் வசிக்கும். ஆப்பிரிக்காவிலுள்ள சிங்கங்கள் பெரியவை. இராக் காலங்களிலே இவை இரை தேடும். பகற் காலங்களில் குகைகளில் தங்கியிருக்கும்.

பசிக்கும்போது சிங்கம் பெருமுழக்கம் செய்யும். அம்முழக்கத்தைக் கேட்ட விலங்குகள் நான்கு பக்கங்களிலும் அஞ்சி ஓடும். அப்போது தனக்கு விருப்பமான விலங்கொன்றைப் பற்றிக் கொன்று தின்று பசியாறும். எவ்வளவு பசியெடுப்பினும் இறந்த விலங்கைச் சிங்கம் தின்பதில்லை என்பர்.

தனக்குப் பசியில்லாதபோது எவ்வுயிரையும் அது கொல்வதில்லை. வீரமுள்ளவர்களைச் **'சிங்கம்'** என்பர். சிங்கக் குட்டிகளைப் படத்தில் பார்!

---



## உ. புலி

புலியும் பூனை இனத்தைச் சேர்ந்ததே. விலங்கினங்களில் சிங்கத்திற்கு அடுத்தபடியாக வலிமையுடையது புலி. 'பார்த்தால் பூனை; பாய்ந்தால் புலி.' என்று கூறுவதைக் கேட்டிருக்கலாம். சிங்கத்தையும் புலி அஞ்சாது எதிர்க்கும்.

சிங்கத்தைப்போல் பிடரி மயிரோ, அடர்ந்த வால் மயிரோ புலிக்கு இல்லை. இஃது ஏறக்குறைய நான்கடி உயரமும், ஆறடி நீளமும் இருக்கும். இதன் முகம் பூனையின் முகம்போல உருண்டையாகவே இருக்கும். இதன் காதுகள் சிறியவை; வட்டமானவை.

புலிக்கு இரவில் நன்முகக் கண் தெரியும். புலியின் கண்கள் நெருப்பு உருண்டைகள்போல் ஒளிவீசும். இதன் கண்பார்வைக்குக் கலக்கமுற்ற சில விலங்குகள் இதனிடம் எளிதில் அகப்பட்டுக் கொள்வதும் உண்டு.

உடலெங்கும் கரிய வரிக்கோடுகள் உள்ள புலியை **'வரிப் புலி'** என்பர். **'வேங்கைப் புலி,' 'சிறுத்தைப் புலி'** என்ற வேறு வகைப் புலிகளும் உள. சிறுத்தைப்புலியின் உடலெங்கும் புள்ளிகள் இருக்கும்.

புலியின் கால்கள் தடித்து, உறுதியானவை. இதன் நகங்கள் நீட்டவும், சுருக்கவும் கூடியவை. புலி, மாடு முதலிய விலங்குகளை வாயால் பற்றித் தூக்கிச் செல்லும்.

புலி குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் இனத்தைச் சேர்ந்தது. இதன் 'முழக்கம்' கேட் போருக்கு நடுக்கத்தை உண்டாக்கும். நீர்த்துறை களின்' அருகில் புலிகள் பதுங்கி இருக்கும். நீர் குடிக்க வரும் விலங்குகளை ஒரே பாய்ச்சலில் தாவிப் பற்றிக் கொன்று தின்னும்.

புலி அடர்ந்தகாடுகளிலும், மலைகளிலும் வசிக் கும். 'புலி பசித்தாலும், புல்லைத் தின்னாது,' என்பர். அஞ்சா வீரனைப் புலிக்கு ஒப்பிட்டுச் சொல்வர்.

———



## ௩. கரடி

கொடுமை நிறைந்த விலங்கினங்களில் கரடியும் ஒன்று. இது காடுகளிலும் மலைப்புறங்களிலும் வாழும். புலிபோல் வேகமாகப் பாயவோ, சிங்கத்தைப்போல் வீரமாகச் சண்டை செய்யவோ கரடியினால் முடியாது. எனினும், கரடி அச்சந் தரும் விலங்குதான். இது சிறிய விலங்குகளையும், மக்களையும் கொன்று தின்னும்.

கரடி ஏறக்குறையப் பன்றியைப் போன்றிருக்கும். கரடியின் உடல் முழுதும் மயிர் அடர்ந்திருக்கும்; இதன் நகங்களும், பற்களும் கூர்மையானவை; முகம் சிறிது நீண்டிருக்கும்.

கரடியின் தோல் தடித்தும் உறுதியாகவும் இருக்கும். ஏறக்குறைய ஐந்தடி உயரமும், ஆறடி நீளமும் இருக்கும். கரடிகள் பெரும்பாலும் கறுப்பு நிறமே. குளிர் நாடுகளில் வெள்ளைக் கரடிகளும் உண்டு.

சிங்கத்தைப்போல் கரடிகள் குகைகளில் தங்குவதில்லை; பார்வைக்குக் கரடி அச்சந் தரக் கூடிய உருவ அமைப்பை உடையது. இது குட்டி போட்டுப் பால் கொடுக்கும்.

சில கூத்தாடிகள் கரடிகளைப் பிடித்து ஆட்டம் காட்டுவதும் உண்டு. பழகிய கரடி நாட்டியம் ஆடும்; பல கூத்துக்களும் செய்யும். கரடிகள் அடர்ந்த புதர்களில் மறைந்திருக்கும்போது, அவற்றை எளிதில் கண்டுபிடிப்பது இயலாது.

கரடிக்கு மரம் ஏறத் தெரியாது. மிகு விரைவாக ஓடவும் இதனால் முடியாது. கரடியால் பொதுவாக மக்களுக்குப் பயனில்லை; மக்களைக் கண்டால் கொன்று தின்றுவிடும் இயல்புடையது.

பரட்டைத் தலையுடன் பார்வைக்கு அருவருப்பாகவும், அச்சமூட்டும்படியாகவும் விளங்குபவர்களைக் 'கரடி போன்றிருக்கிறாயே? ஏன்?' என்று கேட்பதுண்டு.

———



## ௧. காளை

காளையை அனைவரும் பார்த்திருக்கின்றோம். காளையை **'உழவனுக்குத் தோழன்'** என்று சிறப்பாகச் சொல்வார்கள்.

காளையின் முதுகுக்கும், கழுத்திற்கும் இடையில் உயர்ந்து இருக்கும் பகுதியைப் படத்தில் பார். இதனை **'முசுப்பு'** என்பர். காளையின் கால்களில் பிளவுபட்ட குளம்புகள் இருக்கும்.

சிவப்பு, கறுப்பு, வெள்ளை, வெண்மை கலந்த கறுப்பு, வெண்மை கலந்த சிவப்பு முதலிய நிறங்களில் காளைகளைப் பார்க்கலாம். காளைக்கு இரு கொம்புகள் உள்ளன. வால் நுனியில் மயி

சிறிது அடர்ந்து இருக்கும். உடலின்மேல் உட்காரும் ஈக்களை ஓட்ட வால் அதற்கு உதவியாக இருக்கிறது.

புல், வைக்கோல் முதலியவைகளைக் காளை விருப்பமாக உண்ணும். தவிடு, பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை என்றால் காளைகளுக்கு விருப்பம் மிகுதி.

நம் நாட்டில் காளைகள் பலவகைகளிலும் மக்களுக்குப் பயன்படுகின்றன. வண்டி இழுக்கவும், நிலம் உழவும் காளைகள் பெரிதுந் துணை செய்கின்றன. கிணற்றிலிருந்து கவலை நீர் இறைக்கவும் காளைகளைப் பயன்படுத்துகிறார்கள்.

காளையின் சாணம் நிலத்திற்கு நல்ல உரமாகும். வரட்டி தட்டி அடுப்பு எரிக்கவும் இது பயன்படுகின்றது. காளையின் கொம்புகளிலிருந்து சீப்பு, சிமிழ், விளையாட்டுப் பொருள்கள் முதலியன செய்கிறார்கள். காளையின் தோல் செருப்பு முதலியன செய்யப் பயன்படுகிறது.

பல வீடுகளில் காளைக் கன்றுகளைக் குழந்தைகள் போன்று அன்பு காட்டி வளர்ப்பார்கள். கழுத்தில் சதங்கை ஒலிசெய்யத் துள்ளி விளையாடும் கன்று பார்க்க அழகாக இருக்கும்.

———



## ரு. குரங்கு

மரங்களடர்ந்த இடங்களிலும், காடுகளிலும், மலையோரங்களிலும் குரங்குகள் கூட்டம் கூட்டமாக வசிக்கின்றன. குரங்கு குட்டிக்குப் பால் கொடுக்கும் விலங்கினத்தைச் சார்ந்தது. குரங்கிற்கும் மற்ற விலங்குகளுக்கு இருப்பவைபோல் நான்கு கால்கள் உள்ளன. கால்களின் நுனியில் விரல்களும், விரல்களின் நுனியில் கூரிய நகங்களும் இருக்கும். முன்கால்களிரண்டும் கைகள் போலக் குரங்கிற்குப் பயன்படுகின்றன. பின் கால்கள் இரண்டும் கால்கள் போல் பயன்படுகின்றன. இருப்பினும், இவைகளுக்கு நடக்கத் தெரி

யாது. பழக்கப்பட்ட குரங்குகள் நடந்து செல்வது வேடிக்கையாக விருக்கும்.

குரங்கின் உடலில் அடர்ந்த மயிருண்டு. பெரும்பாலும் குரங்குகள் வெண்சாம்பல் நிறத்திலும், சிறுபான்மை வேறுவேறு நிறங்களிலும் இருக்கின்றன.

குரங்குகள் தாவித்தாவி விரைவாக ஓடும். மரங்களின் உச்சியிலும் ஏறும். ஒரு கிளையினின்று, மறுகிளைக்குத் தாவும். தாவி ஓடும் போதும், கிளைக்குக்கிளை தாவும்போதும் குரங்குக் குட்டிகள் தாய் வயிற்றை இறுகப் பற்றிக் கொண்டு அச்சமின்றி இருக்கும்.

குரங்குகளில் பலவகையுண்டு. வாலில்லாக் குரங்கு ஒருவகையென முன்னர்க் கண்டோம். மனிதக் குரங்கு என்று மற்றொரு வகையும் உண்டு. இது பெரும்பாலும் உருவ அமைப்பில் மனிதனையே ஒத்திருக்கும். எனினும், மனிதருக்கு இருக்கும் பகுத்தறிவு இதற்கு இல்லை.

குரங்குகள் பிடித்த பிடியை விடாது என்பர். எனவேதான், பிடிவாத குணமுள்ளவரைக் 'குரங்குப்பிடி பிடித்திருக்கிறான்' என்று சொல்கின்றனர்.



## ௬. குள்ள நரி

நரி தந்திரத்திற்கும், திருட்டுத்தனத்திற்கும் பெயர் போனது. வயல்வெளிகளிலும் அடர்ந்த புதர்களிலும், காடுகளிலும், கற்பாறைகளின் இடுக்குகளிலும் நரிகள் பெரும்பாலும் வாழும்.

சிறிய நரிகளைக் **குள்ளநரி** என்றும் சொல்லுவதுண்டு. குள்ளநரி மனிதரையோ, ஆடு மாடுகளையோ எதிர்ப்பதில்லை. எதிர்க்கும் வலிமையும் அதற்கு இல்லை.

ஆட்டுக்குட்டிகளையும், கோழி, கோழிக் குஞ்சு முதலிய சிறிய உயிரினங்களையும் கள்ளத்தனமாகப் பிடித்துக்கொண்டு போய்த் தின்பதில்

குள்ளநரி பெயர் போனது, பெரும்பாலும் நரி களுக்கு நண்டுகளைப் பிடித்துத் தின்பதில் பெரு விருப்பம்.

நாய்களைப்போலவே நரிகளுக்கும் உடல மைப்பு அமைந்திருக்கிறது. ஆனால், நரிகளின் வாலில் மயிர் அடர்ந்திருக்கும். நரிகளுக்கு நான்கு கால்களும், கால்களின் நுனியில் நகங் களும் இருக்கின்றன. கால்கள் குட்டையானவை. இருப்பினும், நரி மிகு விரைவாக ஓடிப் பதுங்கும்.

நரிகள் பகற்காலங்களில் இரை தேட வெளி யில் வருவதில்லை. இராக் காலங்களிலேயே, வெளியில் செல்லும், ஆட்டுக்கிடைகள் மடக்கப் பட்டிருந்தால், மெள்ளச் சென்று ஆட்டுக்குட்டி களைத் தூக்கிச் சென்றுவிடும்.

பெரும்பாலும் இராக் காலங்களில் பல குள்ளநரிகள் ஒன்று சேர்ந்து ஊளையிடுவதும் உண்டு.

தந்திரமாகச் செயலாற்றுபவரையும், வஞ்சக மாகப் பிறர் பொருளைக் கவர்பவரையும் 'குள்ள நரி' என்று சொல்வதுண்டு.

---



## எ. மான்

மான் பார்வைக்கு அழகானது. மிகவும் சாதுவானது, அச்சமுடையது; மாட்டைப்போலவே அசைபோடும் இயல்புடையது.

மானின் உடல் உருண்டு திரண்டிருப்பதைப் பார். உடலெங்கும் குறுமயிரடர்ந்து பார்க்கப் பளபளப்பாக இருக்கும். மானின் கண்கள் பெரியவை; மருளும் பார்வையுடையவை. காதுகள் நீளமாக இருக்கும். ஆனால், வால் மிகக் குட்டையானது.

மானின் கால்கள் மெலிந்து நீண்டு உறுதியானவை. மான் அதன் கால்களின் துணையால்

அதன் பகை விலங்குகளிடமிருந்து விரைவில் தப்பி யோடிவிடும். மான் முப்பதடிக்குமேல் தாவும்; அதன் கால்களின் நுனியில் பிளவுபட்ட குளம்புகள் உண்டு.

மான்கள் பலவகையான கொம்பு வேறுபாடுகள் உடையவை. சில மான்களின் கொம்புகள் நேராகவும், உள் துளையுடனும் இருக்கும். சிலவற்றிற்கு உறுதியாகக் கிளைத்த கொம்புகள் உண்டு. சில மான்கள் வெள்ளாடு போலவும், சில பசுப்போலவும், சில எருமைபோலவும், சில குதிரைபோலவும் உருவ அமைப்பு உடையவை.

புல்லே மானின் உணவு. மான் கொம்பு மருந்தாகப் பயன்படுகிறது! சிறு பொருள்கள செய்யவும் பயன்படுத்துகிறார்கள். மானின் தோலைச் சிலர் படுக்கையாகப் பயன்படுத்துகிறார்கள்.

சிலர் அழகுக்கு மானை வளர்ப்பர். எல்லா மான்களும், ஊக்கமும், எச்சரிக்கையும் உடையவை. இவை காடுகளில் கூட்டங் கூட்டமாக வாழும். புல்வெளிகளில் மான்கள் விளையாடுவது அழகாக இருக்கும். இராக் காலங்களில் வால் பக்கமெல்லாம் ஒன்றுசேர மான்கள் வட்டமாகப் படுத்துறங்கும்.

---



## அ. முயல்

முயலை நீ பார்த்திருக்கிறாயா? முயல் அச்ச முடையது. மானைப்போலவே முயலும் மிரள மிரள விழிக்கும்.

முயல் காடுகளில் வசிக்கும். புதர்களில் மறைந்தும், குழி தோண்டியும் வாழும். பெரும் பாலும் முயல்கள் சாம்பல் நிறமுடையனவாகவே இருக்கும். சிறுபான்மை வெள்ளை முயல்களும் உண்டு. இவைகளுக்குக் குழி தோண்டத் தெரி யாது. எனவே புதர்களிலேயே வசிக்கும்.

முயலின் முகம் எலியின் முகத்தைப்போலச் சிறிது நீண்டு இருக்கும்; கண்கள் பெரியவை;

காதுகள் மாடுகளுக்கிருப்பதுபோல் நீண்டவை. ஆனால், முயல் சற்றேறக்குறையப் பூனையளவே இருக்கும். முயலின் முன்கால்கள் குட்டையானவை. பின்கால்கள் நீண்டவை. அதனால்தான் முயல் குதித்துக் குதித்து விரைவாக ஓடுகின்றது.

முயல்களில் **குழிமுயல், வெள்ளைமுயல், எலிமுயல்** எனப் பலவகையுண்டு. குழிமுயல் தரையில் குழி தோண்டி வாழும். எலிமுயலின் உருவம் எலியைப்போல இருக்கும். ஆனால், முயல் போன்ற சாயலையுடையது. இதனைச் சீமைப் பெருச்சாளி என்றும் சிலர் சொல்வதுண்டு. இதன் உருவம் சிறியது. இஃது ஆற்றங்கரை சார்ந்த காடுகளில் கூட்டங் கூட்டமாக வாழும். எலி முயல் தண்ணீரில் நீந்தும்; புல்லைத் தின்னும் இரவில்தான் நடமாடும்.

பொதுவாக எல்லா முயல்களுக்கும் புல்லே சிறந்த உணவு. முயல் அறிவுடைய உயிரினம் என்பர். பகைவரிடமிருந்து தப்பித்துக்கொள்ளும் அளவுக்கு அறிவுக்கூர்மை உடையது.

முயல் ஓராண்டில் ஐம்பது குட்டிகள் ஈனும்; ஆறு திங்களில் முயல்குட்டிகள் தக்க பருவம் அடையும்.

---




## கூ. சிட்டுக் குருவி

பறவைகளில் மிகச் சிறியது சிட்டுக் குருவி. இதற்கு, இரண்டு சிறகுகள், இரண்டு கால்கள். நீண்டவால், அலகு முதலியன இருக்கின்றன, கால்களின் நுனியில் விரல்கள் அமைந்திருப் பதைப் படத்தில் பார். இவ்விரல்களால் கிளை களைப் பற்றி நிற்கும்.

பெரும்பாலும் சிட்டுக் குருவிகள் வெப்ப மான நாடுகளில் வாழும். இவை இனிய குர லுடையவை. சிட்டுக்குருவி, தனித்தனியாகவும் கூட்டமாகவும் இனிமையாகப் பாடும்.

சிட்டுக் குருவிகளில் பலவகை உள்ளன, **தூக்கணாங்குருவி, நெய்தற்பறவை, வானம்பாடி, ஊர்க்குருவி, உங்காரப்பறவை, நகைக்கும்பறவை. ஏளனப்பறவை** என்பவை யனைத்தும் சிட்டுக் குருவி இனத்தைச் சேர்ந்தவையே.

இவை கூடுகட்டியே வாழும்; முட்டையிட்டே இனத்தைப் பெருக்கும். தூக்கணாங் குருவி இலையோடு இலை சேர்த்துக் கூடுகட்டும்.

இதனைத் **'தையற்பறவை'** என்பர். நெய்தற் பறவை மரநார்களைக் கொண்டு கூட்டை நெய் வதுபோலக் கட்டிக்கொள்ளும். வானத்தில் கூட்டம்கூட்டமாகப் பாடும் ஒருவகைச் சிட்டுக் குருவிகளே **'வானம்பாடி'** எனப்படும்.

வானம்பாடியின் மூக்கும், கழுத்தும் சிறியவை. இவை பறக்கும்போது உடல் மட்டுமே நமக்குப் புலப்படும். வீடுகளில் கூடுகட்டி வாழ்பவை ஊர்க்குருவிகள். உங்காரப் பறவை உருவில் மிகவுஞ் சிறியதாக இருக்கும்.

சில சிட்டுக்குருவிகள் தானியங்களையும், சில காய்கனிகளையும் உணவாக உட்கொள்ளும். சிட்டுக்குருவி உருவில் சிறியதாயினும் விரைவாகப் பறந்து செல்லும். சுறுசுறுப்பாகச் செயலாற்றுபவரைச் 'சிட்டுக்குருவி' என்பார்கள்.

---



## க௦. கரும்பு

**கரும்பு புல் இனத்தைச் சேர்ந்தது.** இஃது எட்டு அல்லது பத்து அடி உயரம் வளரும். கரும்பை நீ தின்றிருக்கிருயா? கரும்பிலிருந்து சாறுகிடைக்கும். இது மிக்க சுவையாக இருக்கும். இதனைக் கருப்பஞ்சாறு என்பர்.

கரும்புத் தோட்டங்கள் பார்க்க அழகாக இருக்கும். நல்ல வளமான இடங்களிலேதான் கரும்பு பயிராகும். இது நன்கு வளரத் தண்ணீர் அதிகம் வேண்டும். கரும்பில் பல கணுக்கள் இருக்கும். பார்வைக்குக் கரும்பு சிறு மூங்கில்போல் இருக்கும். **இது 'புல்' இனத்தைச் சேர்ந்தது.**

நிலத்தை ஆழமாக உழுது, நல்ல உரமிட்டு, மஞ்சி கட்டுவர். பிறகு அதில் கரும்புக் கணுக் களை நடுவர். இக்கணுக்களிலிருந்து தளிர்விட்டுக் கரும்பு வளரும்.

கரும்பு முற்றியபின் அவைகளை வெட்டித் துண்டுகளாக நறுக்கி ஆலைகளில் இட்டுச் சாறு பிழிவார்கள். பிழிந்த இக்கருப்பஞ் சாற்றைக் கொப்பறைகளில் காய்ச்சி வெல்லமும், பழுப்புச் சர்க்கரையும் செய்வார்கள். இதைத் தூய்மைப் படுத்தி வெள்ளைச் சர்க்கரை செய்வர். சாறு பிழிந்தபின் நிற்கும் கரும்புக்கோது அடுப்பு எரிக்க வும், அட்டைப் பெட்டிகள் செய்யவும் உதவும்.

கரும்பில் **செங்கரும்பு, வெள்ளைக் கரும்பு, பேய்க்கரும்பு** என மூவகையுண்டு. செங்கரும்பும், வெள்ளைக் கருப்பும்தான் மிக்க பயன் தரும். பேய்க் கரும்பு சாறுபிழியவோ, சருக்கரை செய்யவோ பயன்படாது. எனவே, வெற்றிலைத் தோட்டங் களிலும் வாழைத் தோட்டங்களிலும் வேலிக்காக இது பயிரிடப்படுகிறது.

நம் நாட்டில் பல இடங்களிலும் கரும்பு பயி ரிடப்படுகிறது. கரும்புப் பயிர் பிற பயிர்களைவிட அதிகப் பயன் தரும். 'கரும்பு தின்னக் கூலியா?' என்ற பழமொழியை நீ கேட்டிருக்கிறாயா?

---



## கக. மஞ்சள்

மஞ்சள் கிழங்குவகையினைச் சேர்ந்தது. கருணை, சேம்பு, வள்ளி முதலிய கிழங்குகளைப் போல மஞ்சளையும் பயிர் செய்வார்கள்.

மஞ்சள் செடியின் இலைகள் நீண்டு இருக்கும். இலையின் நுனிப்பகுதி கூர்மையானது. இடைப் பகுதி வாழை இலையைப்போல் சிறிது அகன்று இருக்கும். இதனைத் தோட்டக்கால் பயிராகச் செய்வர்.

மஞ்சளைத் தொன்றுதொட்டு மக்கள் சிறப் பாகப் போற்றிவருகிறார்கள். திருமணக்காலங் களிலும், நல்ல நாட்களிலும் மஞ்சள் இன்றியமை

யாத பொருள். விதைக்கென வைத்துள்ள சிறு மஞ்சள் கிழங்குகளைப் பாத்திகளில் நடுவார்கள். மஞ்சள்செடி மூன்று, நான்கடி உயரம் வளரும். நிலத்தின் கீழ் கிழங்கு பிடிக்கும். மஞ்சள் வளர வளர கிழங்குப்பகுதியும் அதிகம் பிடிக்கும்.

மஞ்சள்செடி நன்கு வளர்ந்ததும் கிழங்குடன் வெட்டியெடுப்பர். பின்பு மஞ்சள்கிழங்கு வேருகவும், செடி வேருகவும் பிரிப்பர். பச்சை மஞ்சளைப் பதப்படுத்தி உலர்ந்த மஞ்சளாக்குவர். உலர்ந்த மஞ்சளைத் தூளாக்கிச் சமையலுக்குப் பயன்படுத்துகிருர்கள்.

பொங்கற் பண்டிகையின்போது மஞ்சள் செடியைக் கிழங்குடன் வைத்துப் படைப்பர். நன்குவளர்ந்த செடிகளுள்ள மஞ்சள் தோட்டம் பச்சைப்பசேல் என்று இருக்கும். மஞ்சள் கிழங்குடன் மெல்லிய வேர்கள் இணைந்திருக்கும். மஞ்சள் கிழங்கைத் தூய்மைப் படுத்தும்போது இவ் வேர்களை அகற்றிவிடுவர்.

நம் நாட்டுப் பெண்கள் மஞ்சளை அரைத்து முகத்தில் பூசிக்கொள்வர். மஞ்சள் மக்களுக்குப் பலவகையிலும் பயன்படுகிறது. கணவனை இழந்த பெண்கள், ‘மஞ்சள் குங்குமம் இழந்த பெண்கள்,’ எனப் பிறரால் சுட்டிக்காட்டப் படுவதை நீ கேட்டிருக்கிருயா?



## கஉ. மிளகாய்

பயிர் வகைகளில் தோட்டக்கால் பயிர் என்று ஒருவகையுண்டு. **கத்தரி, வெண்டை, பீர்க்கம், கொத்தவரை, மிளகாய்** முதலியன தோட்டக்கால் பயிர்வகையைச் சேர்ந்தவையே.

வீட்டிலும், கடைகளிலும் பழுத்த மிளகாயை நீ பார்த்திருக்கலாம். இவை சிவப்பாக இருக்கும். பச்சைமிளகாய் பச்சையாகவே இருக்கும். நீண்டு காய்த்த மிளகாய் மூன்றுமுதல் ஆறு அங்குலம்வரை இருக்கும். சிறியவை ஒரு அங்குலத்திற்குக் குறையாது. இவற்றினும் சிறிய

வைகளைப் **பொடிமிளகாய்** என்பர். **ஊசிமிளகாய், குடமிளகாய்** என்று வேறு வகைகளும் உள.

மிளகாய் விதைகளைப் பாத்திகட்டி நாற்று விடுவார்கள். சிறிது வளர்ந்ததும், அவைகளைக் களைந்து நிலத்தை ஆழமாக உழுது, உரமிட்டுக் கட்டப்பட்ட மஞ்சிகளில் நடுவார்கள். நட்ட சில மாதங்களில் மிளகாய்ச் செடி செழித்து வளர்ந்து பூக்கும். மிளகாய்ப் பூ வெண்மையாக இருக்கும்; பின்பு காய்காய்க்கும். செடிகளிலேயே மிளகாய் பழுத்ததும், அதைப் பறித்து உலர்த்து வார்கள். உலர்ந்தவைகளைத் தூளாக்கிச் சமைய லுக்குப் பயன்படுத்திக்கொள்வர்.

மிளகாய்த்தூள் காரமானது. எனினும், மிளகாய்த்தூள் கலவாத எந்தக் காய்கறியும் சுவையாக இருக்காது. ஒன்பதுவகைச் சுவை களில் காரமும் ஒன்று.

நன்குசெழித்து வளர்ந்த செடியில் நூற்றுக் கணக்கான காய்கள் காய்க்கும். பச்சை மிளகாய் தேவைப்பட்டோர், பச்சையாக இருக்கும்போதே செடிகளினின்று பறித்துக்கொள்வர்.

மிளகாய்ச்செடிக்கு மூன்று நாட்களுக்கு ஒருமுறை நீர் பாய்ச்சவேண்டும். வாடாமல் நீர் இறைத்துவந்தால் இது நல்ல பலன் தரும்.

---



## கரு. கத்தரி

காய்கறிக்குப் பயன்படும் செடிகளுள் கத்தரி ஒன்று. இது தோட்டக்கால் பயிர் இனத்தைச் சேர்ந்தது. கத்தரிச் செடியைப் படத்தில் பார்.

கத்தரிக்காய் பெரும்பாலும் நீண்ட உருண்டை வடிவாகவே இருக்கும். சில காய்கள் மிக நீண்டும், சில உருண்டையாகவும் இருக்கும். கத்தரி இலை வளைந்து வளைந்து இருக்கும். சிறிது தடிப்பாகவும், சொரசொரப்பாகவும், சாம்பல் பூத்த நிறத்துடனும் காணப்படும். மிளகாய்ச் செடியைப்போல, கத்தரிச் செடியும் கிளைகளாகக்

கிளைத்தே வளரும். வளமான இடங்களில் நன்கு வளர்ந்த கத்தரிச் செடி ஐந்தடி உயரமும் இருக்கும்.

கத்தரியையும் நாற்றுவிட்டே நடுவர். கத்தரிச்செடிகளை இரண்டு அடிக்குக் குறைந்து நடுவது கூடாது. அவ்வாறு நட்டாலும் அவை நல்ல பலன் தரா. கத்தரிவிதை மிளகாய் விதையைவிட மிகவும் சிறியது. மஞ்சுகளின் ஓரத்தில் ஒவ்வொரு செடியாக நடுவர். மூன்று நாட்களுக்கு ஒருமுறை நீர் பாய்ச்சுவர். சிறிது வளர்ந்ததும் களை எடுப்பர். களை எடுத்து நீர் பாய்ச்சிய பின்னரே கத்தரிச் செடி பசுமையாகச் செழித்து வளரும். கத்தரிப்பூ வெண்மைகலந்த சிவப்பு நிறமாக இருக்கும்.

கத்தரிக்காயில் இருவகையுண்டு. வெண்மையாகவும், செந்நிறத்துடனு மிருக்கும். கத்தரிக்காயைப் பொரியல், கூட்டு, முதலிய வகையாகச் சமைப்பர். சிலர் கீரையைப்போல் கடைந்து உண்பதும் உண்டு. முற்றுத முன்னரே கத்தரிக்காயை அறுத்துக் சமையல் செய்வர்.

கத்தரிப்பிஞ்சு நோயாளிகட்கு நல்லது. கத்தரியில் அயச்சத்து உண்டு. அயச்சத்து உடலுக்கு நல்ல வலிவையும் வனப்பையும் கொடுக்கும்.

---



## கச. வெண்டை

வெண்டை செடியினத்தைக் சேர்ந்ததே. வெண்டைச் செடி மற்றச் செடிகளைவிட அதிக உயரம் வளரும். வெண்டைக்காய் நீண்டு இருந்தாலும், பக்கங்களில் பட்டையாகவே இருக்கும். இது பசுமை நிறத்துடன் இருக்கும். சில வெண்டைக்காய்கள் வெண்மையாகவும் இருக்கும். இவைகளைப் **'பால்வெண்டை'** என்பர்.

கத்தரியோ, மிளகாயோ நாற்றுக்களைக் களைந்து நடும்போது, நீர்பாயும் கால்வாய் மஞ்சுகளில் வெண்டை விதைகளை நடுவார்கள்.

வெண்டைவிதை மிளகு அவ்வளவு இருக்கும். ஆனல், இது சாம்பல் நிறமாகும்.

வெண்டைப்பூ மஞ்சள் நிறமாக இருக்கும். இதன் இலை கத்தரி இலையைவிட அகன்று, வளைந்து வளைந்தே இருக்கும். கிளைகளாகக் கிளைத்தே வளரும். கிளைகளின் இடுக்குகளிலேயே வெண்டை காய்க்கும். முற்றிய வெண்டை பயன்படாது. சிறிது பிஞ்சாக இருக்கும்போதே பறித்துச் சமையல் செய்வதுதான் நல்லது.

வெண்டைக்காயில் வழவழப்பான பசையுண்டு. எனினும், வெண்டையும் சத்துள்ளது என்பர். சிலர் பச்சை வெண்டையைப் பறித்துத் தின்பதும் உண்டு.

சில மருந்துமுறைகளுக்கு வெண்டைப் பிஞ்சைப் பயன் படுத்துகிருர்கள். வெண்டைச் செடி அடிப்பக்கம் தடித்து வளரும். வளர்ந்த செடிகள் ஐந்து அடி உயரமும் இருக்கும். வெண்டைக் காய்கள் பத்து அங்குல நீளமும் இருக்கும். விதைக்கெனச் சில வெண்டைகளை முற்றவிட்டு உலர்த்திவைத்துக் கொள்வர்.

வெண்டை தோட்டக்கால் பயிர் எனினும், தனியாக ஒருதோட்டம் முழுவதும் வெண்டையைப் பயிரிடுவதில்லை.

---



## கரு. புடலங்காய்

புடலங்காயை நீ பார்த்திருக்கிறுயா? படத்தைப் பார். பாம்புகளைப்போல நீண்டு கீழே தொங்குபவைதான் புடலங்காய் எனப்படும்.

புடலங்காய் சாம்பல்பூத்த பச்சை நிறத்துடன் காணப்படும். பாம்பைப்போல நீளமாகவே இருக்கும். பெரிய புடலங்காய்கள் நான்கு அல்லது ஐந்தடி நீளமிருக்கும். இது கொடிகளில்தான் காய்க்கும். வேலிஓரங்களிலும், பந்தல்களின் கீழும் புடலம் விதைகளை நடுவார்கள். புடலம் விதை முளைத்து, கொடியாகப் படரும். கொடி படரத் துவங்கியதும் அக்கொடிகளை வேலிகளின்

மீதும், பந்தல்களிலும் இணைத்து விட்டுவிடுவார்கள். பின்பு அவை படர்ந்துகொள்ளும்.

புடலங்காய் காய்கறி வகைகளில் ஒன்ருகப் பயன்படுகின்றது. புடலம் விதை சந்தன வண்ணமாகவும், நீண்டு தடித்தும் இருக்கும். இது நட்ட சில நாட்களில் முளைத்துவிடும். வேர் பிடித்துப் படரும் வரையில் அடிக்கடி தண்ணீர் ஊற்றவேண்டும். நன்கு படர்ந்தபின் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை தண்ணீர் ஊற்றிஞல் போதும்.

புடலங்கொடியின் இடையிலெல்லாம் கம்பி போன்ற மெல்லிய சுருள்கள் காணப்படும். சில புடலங்காய்கள் வெண்மையாக இருக்கும்; சில பச்சை வண்ணத்துடன் இருக்கும். இன்னும் சில வெள்ளைக் கோடுகள் கலந்த பச்சை நிறத்துடன் காணப்படும். புடலம்பூ வெண்மை கலந்த மஞ்சள் நிறமானது.

நிலத்தை நன்ருகக் கொத்தி, நல்ல உரமிட்டு நடப்படும் புடலம் விதைகள் செழித்து வளரும்; அதிக பலனும் கொடுக்கும். "பந்தலிலே பாம்பு தொங்குகிறது; வேலி ஓரத்தில் பாம்பு படுத்திருக்கிறது," என்ற விடுகவிகளை நீ கேட்டிருக்கிருயா? அப்படி என்ருல், புடலங்காய் என்று பொருள்.



## கசு. பீர்க்கு

பீர்க்கு காய்கறி வகைகளைச் சேர்ந்ததே. புடலங்காயைப்போலப் பீர்க்கும் கொடிகளிலே தான் காய்க்கும். கத்தரித் தோட்டங்களிலும், மிளகாய்த் தோட்டங்களிலும் பீர்க்கை வேலி ஓரங்களில் பயிரிடுவார்கள். சிலர் வீட்டிற்குப் பக்கத்திலுள்ள தோட்டங்களில் பந்தல் போட்டுப் பயிராக்குவதும் உண்டு.

பீர்க்கங்காய் பச்சைப்பசேல் என்றிருக்கும். காம்புப் பக்கம் சிறுத்தும், முனைப்பக்கம் பருத்தும் இருக்கும். பீர்க்கங்காயின் பக்கங்கள் சிறு பட்டை தீட்டியது போலவும் சிறுசிறு மேடு

பள்ளங்களாகவும் இருக்கும். மிளகாய் முதலிய மிகு பயன் தரும் தோட்டக்கால் பயிர்கள் செய்யும்போது வேலி ஓரங்களில் பீர்க்கம் விதைகளை நட்டுவிடுவார்கள். வேலி முழுதும் கொடிகளாகப் படர்ந்து நல்ல பலன் தரும். பீர்க்கங்காயின் காம்பு சிறிது உறுதியானது.

முற்ருத பீர்க்கங் காய்களே சமையலுக்குப் பயன்படும். முற்றியவை சுவையாக இரா. எனவே முற்றியவைகளைக் கொடிகளிலேயே நன்ருக முற்றவிட்டுக் காய்ந்துபோன பின் விதைக்கென எடுத்து வைத்துக்கொள்வார்கள். இவ் விதைக் காய்களை அறுத்துப் பார்த்தால் உள்ளே பஞ்சுக் கூடு இருக்கும். இக்கூடு மூன்று பிரிவுகளாகக் காணப்படும். இப் பிரிவுகளில்தாம் பீர்க்கம் விதைகள் இருக்கின்றன.

பீர்க்கம் பஞ்சைச் சிலர் குளிக்கும்போது உடல் தேய்க்கப் பயன்படுத்துகிருர்கள். இப் பஞ்சு சுரசுரப்பாக இருப்பதால் உடலிலிருக்கும் அழுக்கை நன்கு போக்கிவிடுகிறது. பீர்க்கம் இலையும் வளைந்து வளைந்தே இருக்கும்; செம்மையாக இராது.

---



## கஎ. பூசணி

புடல், பீர்க்கு முதலியவைகளைப் போல் பூசணியும் கொடியில் காய்ப்பதுவே. எனினும், பூசணிச்செடியை வேலி ஓரங்களிலும், பந்தல்கள் கட்டியும் பயிரிடுவதில்லை. பூசணிக்காய் மற்றக் கொடியினத்தில் காய்க்கும் காய்களைவிட உறுதியானது; பெரியது; அதிக சுமையும் உள்ளது. வேலிகளிலோ, பந்தல்களிலோ தன் காயின் சுமையைத் தாங்கிக்கொண்டு இதனால் நிலைத்திருக்க இயலாது.

பூசணியைக் கொல்லை நிலங்களில் பயிராக்குவர். சிலர் வீட்டின் பக்கத்தில் பயிரிட்டுக், கொடி

களை வீட்டுக் கூரைகளின்மீது படர வழி செய்வதும் உண்டு.

பூசணியில் இருவகையுண்டு. கோடைப்பூசணி என்பது ஒருவகை. படத்தில் இருப்பது கோடைப் பூசணியே. பெரும்பாலும் இப்பூசணிக்காயைப் பச்சையாக இருக்கும்போது அறுத்துக் கறியாக்குவதில்லை; பழுத்த பின்னரே அறுப்பர். பழுத்த பூசணிகள் சந்தன வண்ணமாக இருக்கும். கலியாணப்பூசணி என்பது மற்றொரு வகை. இது சாம்பல் பூத்த பச்சை நிறத்துடன் காணப்படும். இதுவும் கறிக்குப் பயன்படுவதுதான். கோடைப் பூசணி தட்டையான உருண்டையாகவும், பக்கங்களில் வளைவுப் பட்டைகளாகவும் இருக்கும். கலியாணப்பூசணி நீண்ட உருண்டை வடிவமாகவே இருக்கும்; வளைவுப்பட்டைகள் இரா.

பூசணிக் காம்பு மற்றக் கொடிகளில் காய்க்கும் காய் கறிகள் எல்லாவற்றையும்விட மிக்க உறுதியானது. ஒரே கொடியில் பல காய்கள் காய்க்கும். பூசணி இலை சுரசுரப்பாகவும், பெரியதாகவும் இருக்கும். பூசணிப்பூ மஞ்சள் நிறமாக இருக்கும். மார்கழி மாதத்தில் வீட்டிற்குமுன் கோலமிட்டுப் பசுச் சாண உருண்டைகள்மேல் பூசணிப் பூவைக் கிள்ளி விரித்து வைப்பதை நீ பார்த்திருக்கலாம்.

—



## கஅ. அவரை

அவரையைப் பெரும்பாலும் பந்தல்கள் கட்டியே பயிராக்குவர். இதுவும் கொடிவகைக் காய்கறிகளைச் சேர்ந்ததே. அவரைக்காய் நீண்டு வளைந்து தட்டையாக இருக்கும்.

அவரை விதை உருண்டையாகவே இருக்கும்; மொச்சைக் கொட்டையை நீ பார்த்திருக்கிறாயா? மொச்சையின் அளவேதான் அவரை விதையும் இருக்கும். ஆனால் மொச்சை வெண்மையாகவும், அவரைவிதை கறுப்பாகவும் இருக்கும். சில அவரை விதைகள் சிவப்பாகவும் இருக்கும். அவரை இலைகள் சிறியவை.

நிலத்தை நன்கு கொத்தி, எருவிட்டுச் சில அவரை விதைகளை நட்டுவிடுவர். இவை செடிகளாக வளர்ந்து, கொடிகளாகப் படரும்போது அக்கொடிகள் படர்வதற் கேற்றவாறு பந்தல்கள் அமைப்பர். பந்தலின்மேல் நன்கு படர்ந்து கொத்துக் கொத்தாகக் காய்க்கத் தொடங்கும்.

அவரைப் பிஞ்சு உடலுக்கு நல்லது. சில நோயாளிகளுக்கு அவரைப் பிஞ்சையே கறியாக்கிச் சில நாட்கள் வரையில் கொடுக்கவேண்டுமென்றும் மருத்துவர் சொல்வதுண்டு. குட்டையான அவரையும், நீண்ட அவரையும் உண்டு. குட்டையாகவும் தட்டையாகவும் இருப்பவை பெரும்பாலும் வெண்மை கலந்த பச்சை நிறத்துடன் இருக்கும். நீண்டு தட்டையாக இருப்பவை நாவற்பழ வண்ணம் கலந்த பச்சை நிறத்துடன் இருக்கும். அவரைப்பூக்கள் பார்வைக்குச் சிறு கிண்ணங்கள் போல் தென்படும். சில பூக்கள் வெண்மையாகவும், சில செம்மை கலந்த வெண்ணிறத்துடனும் இருக்கும்.

அவரைக்காயை உரித்துப் பார்த்தால் அதற்குள் மூன்று அல்லது நான்கு விதைகள் இருக்கும். பச்சைஅவரைவிதைகள் பச்சையாக இருந்தாலும், முற்றியபின்பு கறுப்பாகவும், செந்நிறத்துடனும் மாறிவிடும்.

---



## கக. தென்னை

தென்னை பனைவகையைச் சேர்ந்தது. இது நெட்டையாக உயர்ந்து வளரும். தென்னை இலைகளை ஓலை என்று சொல்வர்.

நல்ல மணற்பாங்கான இடங்களில் தென்னை அதிகமாக வளரும். நம் நாட்டில் மலையாளத்திலும், அந்தமான் தீவு, இலங்கை முதலிய இடங்களிலும் தென்னந்தோப்புகள் அதிகம்.

தென்னையில் பலவகையுண்டு. சில தேங்காய்கள் சிவப்பாகவும், சில பச்சையாகவும் இருக்கும். சிவப்பாக இருப்பவைகளைச் 'செவ்விளநீர்' என்பர்.

முற்றிய தேங்காய்களை நாற்றுவிட்டு, வளர்ந்தபின் தோண்டி எடுத்துப் பெரிய குழி களில் நடுவர். சில வருடங்களில் அது நன்கு வளர்ந்து பலன் தரும்.

தென்னையின் ஒவ்வொரு பகுதியும் மக்க ளுக்குப் பயன்படுகிறது. தேங்காய் உணவுப் பொருளாகப் பயன்படுகிறது. முற்றிய தேங் காய்களை உடைத்துச் செக்கிலிட்டுத் '**தேங்காய் எண்ணெய்**' எடுக்கிறார்கள். தென்னை மட்டை கள் கூரையாகவும். தட்டி கட்டவும், பந்தல் போடவும் பயன்படுகிறது. தென்னை மரம் கழிக ளாக அறுக்கப்பட்டு வீடு கட்ட உதவுகின்றது. தேங்காய் மட்டைகளை நாராக்கிக் கயிறுகள் திரிக்கிறார்கள். தென்னை ஈர்க்குகளைச் சேர்த்துக் கட்டி வீடு பெருக்குகிறார்கள்.

வேனிற் காலங்களில் சிலர் இளநீர் குடிப்ப துண்டு. இது சுவையாக இருக்கும். தேங்காயை உடைத்து, உட்பகுதியைத் துருவி எடுத்து, வீட்டில் சமையலுக்குப் பயன்படுத்துவதை நீ பார்த்திருக்கலாம். சிரட்டை அகப்பைகள் செய் யப் பயன்படுகிறது. தென்னையின் ஒவ்வொரு உறுப்பும் மக்களுக்கு எவ்வாறு பயன்படுகிறது என்பதை நீ அறிகின்றாயா?

---



## உ௦. பனை

தென்னையைப் போலவே பனையும் நீண்டு உயர்ந்து வளரும். இதில் இருவகையுண்டு. ஆண் பனை, பெண்பனை என்று சொல்வர். ஆண்பனை கள் காய்கள் காய்ப்பதில்லை. பெண் பனைகள்தான் காய்கள் காய்க்கும். பனைமரம் கறுப்பு நிறத்துடன் தடித்து நெட்டையாக இருக்கும். உச்சியில்தான் ஓலைகள் கிளைக்கும். மற்ற மரங்களுக்கு இருப்பது போல் பனைக்குக் கிளைகள் இரா.

தென்னையைப் போலவே பனையின் ஒவ்வோர் உறுப்பும் மக்களுக்குப் பயன்படுவதைக் காணலாம். தென்னையும், பனையும் குடிசைத்

தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

பனங்காயை வெட்டினால் மூன்று கண்கள் இருப்பதைக் காணலாம். இவைகளை **நுங்கு** என்று சொல்வர். நுங்குகள் தின்பதற்குச் சுவையாக இருக்கும். சிறிய காய்களில் இரண்டு நுங்குகளே இருக்கும். மூன்றுக்கு மேற்பட்ட நுங்குகள் பெரும்பாலும் இரா. நுங்கெடுத்த காய்கள் அடுப்பெரிக்கப் பயன்படும்.

பனைமட்டைகளின் நுனியில் இருப்பதைப் பனை ஓலை என்பர். பனை ஓலைகள் கூடை முடைய வும், தடுக்குகள் முடையவும் பயன்படுகிறது. பனை ஓலைகளை வீட்டிற்குக் கூரையாகப் போடுவதும் உண்டு. பனை மட்டைகளை அடித்துக் கிழித்து நாராக்கிக் கயிறு திரிப்பர். பனைமரத்தைக் கழிகளாக அறுத்து வீடு கட்டுவர். வைரம் பாய்ந்த பனை ஏற்றத்திற்கு மடலாகவும் துலா வாகவும், பயன்படுகிறது.

மணற்பாங்கான இடங்களில் பனை நன்கு வளரும். பனையிலிருந்து சாறு எடுப்பார்கள். இச் சாற்றைக் காய்ச்சி வெல்லமாக்குவர். பனை வெல்லம் உடல் வெப்பத்தைக் தணிக்கவல்லது. நம் நாட்டில் சில இடங்களில் பனைவெல்லம் காய்ச்சும் தொழில் நடைபெறுகிறது.

———



## ௨௧. கமுகு

கமுகு மரத்தை நீ பார்த்திருக்கிறாயா? படத்தில் பார். கமுகு தென்னை, பனை ஆகியவற்றைப் போன்ற மரமே. இதன் காய்களையே நாம் **பாக்கு** என்கிறோம். இது தென்னை, வாழை ஆகியவற்றைப் போன்று நல்ல ஈரப்பாங்கான இடங்களிலேயே நன்கு வளரும். தென்னை, வாழையுடன் கமுகும் சேர்த்துப் பயிரிடப் படுவஃதுமுண்டு.

கமுகின் இலைகள் தென்னை இலைபோன்றே இறகு வடிவமாய் இருக்கும். இதன் இலையும், பாளைகளும் பச்சைப்பசேல் என்று இருப்பதால், கமுகு மரம் பார்வைக்கு மிக்க அழகாக இருக்கும்.

கமுகின் பூக்கள் பாளைகளிலிருந்து கொத்துக் கொத்தாய்த் தொங்கும். அவை பார்வைக்குப் பாம்பு படம் எடுத்ததுபோல் இருக்கும். ஒவ்வொரு பூவும் ஒரு பெரிய முத்துப்போன்று இருக்கும். இது வெண்மை நிறமாயிருக்கும். இதன் காய்கள் பச்சையாகவும், பழங்கள் சிவப்பாகவும் இருக்கும்.

கமுகுக் காய்களைப் பச்சையாகவும் சிலர் பயன் படுத்துவர். பெரும்பாலோர் பதம் செய்த வற்றையே வெற்றிலையுடன் உண்பர். சிலர் சீவலாகச் சீவிப் பயன்படுத்துவதுண்டு.

பாக்கு துவர்ப்பான சுவையுடையது. எனவே, அதைத் '**துவர்க்காய்**' என்றும் சொல்வதுண்டு. அடை அல்லது வெற்றிலையுடன் உண்பதால், அதை '**அடைக்காய்**' என்றும் சிலர் சொல்வர். பழுத்த பாக்கைப் '**பழுக்காய்**' என்றும் கூறலாம். பாக்குகளைப் பலவகையாகச் செய்து பயன்படுத்துவர். அவை **களிப்பாக்கு, சீவல், கோரை, கொட்டைப் பாக்கு** என்பர்.

மலையாளத்திலும், இலங்கையிலும், பர்மாவிலும் கமுகு அதிகம் பயிரிடப்படுகிறது. நல்ல நாட்களிலும், திருமணங்களிலும் பாக்கு இன்றியமையாதது. உண்டபின் வெற்றிலைபாக்குப் போடுவது நம் நாட்டில் பலருடைய வழக்கம்.

---



## உஉ. மாமரம்

கனிகளில் சிறந்தவை மூன்று. அவை **மா, பலா, வாழை** என்று சொல்வர். இம் முக்கனி களில் மாங்கனி சிறந்தது. எனவேதான் இவ் வரிசையில் முதலிடம் பெற்றிருக்கின்றது.

பலாவைப்போல மாங்கனியும் மரத்தில் காய்ப்பவையே. மாமரம் ஓங்கி வளரும். அடி மரம் பெருத்துக் கனமாக இருக்கும். நீண்ட கிளை களுடன் கிளைத்து வளரும் மரங்களில் மாமரமும் ஒன்று.

மாவில் பலவகை உண்டு. **ஒட்டு, காதர், பீதர், ருமேனியா, நீலம், மல்கோவா** என்பர்.

மாஞ்செடி சிறியதாக இருக்கும்போதே, வேருெரு செடியுடன் ஒட்டவைத்து வளர்ப்பர். அவ்வாறு ஒட்டப்பட்ட இடத்திலிருந்து வேர் கிளம்பி பூமியில் பதிந்து மரமாகிவிடும். இவை களிலிருந்து காய்க்கும் கனிகளை **ஒட்டுமாங்கனி** என்பர். மற்றவகை மாங்கனிகள் தனித்தனி வகையான மரங்களில் காய்க்கும். ஒரே மரத்தில் ஆயிரக்கணக்கான காய்களும் காய்க்கும்.

மாங்காய்கள் முற்றியதும் கீழே விழாமல் அறுத்துக் கனிய வைப்பார்கள். மாங்கனி சுவை யாக இருக்கும். நார் இருக்கும் மாங்கனிகள் அவ்வளவு சுவையாக இரா. நன்கு பழுத்த மாங் கனிகள் ஒருவகை செந்நிறமாக இருக்கும். மாம் பழத்திற்குள் உறுதியான சிறு ஓடமைந்த கொட்டை இருக்கும். இக் கொட்டைகளைக் கொண்டே மரமாகப் பயிரிடலாம்.

சிலர் மாங்காய்களை அறுத்து உப்பிட்டுப் பதப்படுத்தி வைத்துக் கொள்வர். இதை உணவு உட்கொள்ளும்போது பயன்படுத்துவர். அதிக மா மரங்கள் உள்ள இடத்தை **மாந் தோப்பு** என்பர்.

மாமரத்தைப் பலகைகளாக அறுத்துப் பல வகை மரச்சாமான்கள் செய்வர். மாவிலை குறு வாள்போல் நீண்டு இருக்கும். நல்ல நாட்களில் மாவிலையினுல் தோரணங்கள் கட்டுவர்.

---



## உரு. பலா

முக்கனிகள் என்று முன் பாடத்தில் குறிப்பிட்டோம். பலா என்பது பலாப்பழத்தைத்தான் குறிக்கும். பலாக்கனியைப்போன்ற சுவை மிக்க கனிகளே இல்லை எனலாம்.

பலாக் கனி மரத்தில் காய்ப்பது. பலாமரம் மற்ற மரங்களைப்போலவே ஓங்கி வளரும். அடி மரம் வளர்ச்சிக்கேற்றபடி தடித்துக்கொண்டே போகும். பலா இலைகள் நீண்ட வட்டமான உருவில், மற்ற இலைகளைவிடச் சிறிது தடித்து இருக்கும்.

பலாக் கனி பூசணிக்காயைவிடக் கனமானது. இது நீண்ட உருண்டை வடிவமாக இருக்கும். இதன் மேல்தோல் தடித்தும், முள் படிந்தும் இருக்கும். பலாக் கனியை இரு பகுதியாக அறுத்தால் உள்ளே சுளைகள் இருக்கும். இவைகளைப் பலாச் சுளைகள் என்பர். பலாச் சுளைகளைத்தான் மக்கள் உண்பர்.

பலாமரம் சுவைமிக்க கனிகள் கொடுப்பதோடு, வேறு வகையிலும் பயன்படுகிறது. பலாமரத்தைப் பலகைகளாக அறுத்துப் பலவகை மரச் சாமான்கள் செய்வர். பலாமரப் பலகைகள் உறுதிவாய்ந்தவை என்று சொல்வர். பலாக் காய் பிஞ்சாக இருக்கும்போது, அறுத்துக் கறியாகவும் சமைப்பர். பலாமரத்தில் முரசு, கஞ்சிரா முதலிய தோற் கருவிகள் செய்யப்படும்.

பலாச்சுளையின் உட்புறத்தில் கொட்டை இருக்கும். இக் கொட்டையைக் கறியாகச் சமைப்பர். பலாமரங்கள் நிறைந்த இடத்தைப் பலாத் தோப்பு என்பர்.

பலாமரத்தில் ஒருவகைப் பால் உண்டு. அஃது உடல்மேல் பட்டால் பிசின்போல் ஒட்டிக்கொள்ளும். ஆடைகளில் பட்டால் கறை யுண்டாக்கும். பலாமரத்தில் நூற்றுக்கணக்கான காய்கள் ஒரே முறை காய்க்கும்.

---



## உச. வாழை

வாழை தோட்டக்கால் பயிர் இனத்தைச் சேர்ந்தது. வாழை மரங்கள் வளர்ந்து நிறைந்துள்ள இடத்தை வாழைத் தோட்டம் என்பர். சிலர் நஞ்சை நிலத்திலும் பயிர் செய்வர். வெற்றிலைத் தோட்டங்களிலும் வாழையைச் சிறிது தொலைவுக்கு ஒன்றாகப் பயிரிடுவது உண்டு.

வாழை மரத்தின் கிழங்கில் சிறு செடிகள் வளரும். இவற்றை வாழைக் கன்றுகள் என்றே சொல்வர். இவற்றைக் களைந்து சிறு சிறு குழிகளில் ஆறு அடிக்கு ஒன்றாக நடுவர். நீர்வளமிக்க இடங்களில் வாழை செழித்து வளரும்.

வாழை பத்து மாதங்களில் குலை தள்ளும். குலை தள்ளுமுன் சிறிய இலை வரும். இதனைக் கண்ணாடி இலை என்பர். கண்ணாடி இலையுடன் பூ வெளிவரும். பூவின் பட்டைகள் ஒவ்வொன்ருக விழுந்ததும், காய் பிடிக்கும். வாழைக்காய்கள் குலையாகவே இருக்கும். இதைத் **தார்** என்றும் சொல்வதுண்டு.

வாழையில் பலவகை உள. **செவ்வாழை, பச்சைவாழை, மலைவாழை, பேயன்வாழை, பொந்தன்வாழை, பூவன்வாழை** என்று சொல்வர். வாழைப்பழம் சுவையாக இருக்கும். முக்கனி களில் வாழை மூன்ருவதாகக் கருதப்படுகிறது.

வாழைக்குக் கிளைகள் இல்லை. ஆனல், பட்டை கள் உண்டு. இவற்றை உரித்தால் உள்ளே வெண்மையான தண்டு காணலாம். இதனைச் சமைத்து உண்பர். வாழை இலை சிறந்த உண்கல மாகிறது. வாழை நார் பூத்தொடுக்கப் பயன் படும். வாழைநாரிலிருந்து ஒருவித பட்டு ஆடை களும் நெய்யப்படுகின்றன. வாழைக்காயைக் கறியாகச் சமைப்பர். வாழைப் பூவும் கறிக்கு உதவுகிறது.

வாழைத் தோட்டம் நல்ல ஊதியம் தரும். நம் நாட்டில் **நீலகிரி, திண்டுக்கல், ஈரோடு** முதலிய இடங்களில் வாழைத் தோட்டங்கள் அதிகம்.

---



## ௫ வேம்பு

குளிர்ந்த நிழல் தரும் மரங்களில் வேம்பும் ஒன்று. இம் மரம் உயர்ந்து பல கிளைகளாகக் கிளைத்து வளரும். அடிமரம் வளர்ச்சிக்கு ஏற்ற வாறு பருத்தும், சிறுத்தும் இருக்கும்.

கனிவகைகளை மக்கள் தின்பதுபோல, வேப் பங் கனியை எவரும் தின்பதில்லை. வேப்பங்கனி கசப்புத் தன்மையுடையது. வேம்பு இலையும் இதேபோல கசக்கும் தன்மையுடையதே. வேம்பு இலை பார்வைக்கு இரம்பம்போல இருக்கும். இருந்தாலும் இரண்டு அல்லது மூன்று அங்குலத் திற்குமேல் நீளமிருக்காது.

நோய்ப்பட்ட குழந்தைகளுக்கு வேப்பிலையால் மந்திரிப்பர். வேம்புக் காற்று உடலில் பட்டாலும், நோய்வாய்ப்பட்டவர் முகர்ந்தாலும் நோய் குணமாகிவிடும் என்பர். வேம்புக் காற்று உடல் களைப்பைப் போக்குவதுடன், மனத்தில் இன்பத்தையும் ஊட்டும்.

சில மாதங்களில வேப்பமரம் பட்டமரம் போல் கண்ணுக்குப் புலப்பட்டாலும், மீண்டும் தளிர்த்துச் செழுமையாக இருக்கும். வேம்பை எவரும் விரும்பிப் பயிராக்குவதில்லை. வேப்பம் பழத்திலிருக்கும் கொட்டைகளை நட்டு மரமாக்குவதுமில்லை. சில பறவைகள் வேப்பங் கனிகளை விரும்பி யுண்ணும். அவ்வாறு உண்ணும் பறவைகள் கனிகளுக்கு உள்ளிருக்கும் கொட்டைகளை எங்கேனும் போட்டுவிட்டால், அவை நாளடைவில் செடியாகி, பிறகு மரமாகிவிடும்.

வேப்பங் கொட்டைகளைச் செக்கிலிட்டு எண்ணெய் எடுப்பர். இதை விலங்குகளுக்கு வரும் புண்களுக்கு இட்டுக் குணப்படுத்துவர்.

வேப்பமரத்தை அறுத்துப் பலகைகளாக்கிச் சிலவகை மரச் சாமான்கள் செய்வர். வேப்பம் பூவைச் சிலர் கறியாகச் சமைத்து உண்பர். வேப்பங் தளிர் குழந்தைநோய்க்குப் பயன் படும்.

---





